




சிவமயம்

# மருதவாணர் தாலாட்டு

இயற்றியவர்: பேராசிரியர்
டாக்டர் அர. சிங்காரவடிவேலன்.
பாடியவர்: அர. சி. பழநியப்பன்.

[24-7-85 அன்று நள்ளிரவில் காவிரிப்பூம் பட்டினத்தில் அருள்மிகு பட்டினத்தார் அற்புதத் திருவிழாவில் பாடியது]

வெளியீடு - ஜூலை 1986

**பழநியப்பன் பதிப்பகம்**
65 தியாகிகள் சாலை, தேவகோட்டை.

30/4

உ
சிவமயம்

# மருதவாணர் தாலாட்டு

இயற்றியவர்:
பேராசிரியர் டாக்டர் அர. சிங்காரவடிவேலன்.
பாடியவர்: அர. சி. பழநியப்பன்

(24-7-85 அன்று நள்ளிரவில் காவிரிப்பூம் பட்டினத்தில் அருள்மிகு பட்டினத்தார் அற்புதத் திருவிழாவில் பாடியது)

வெளியீடு – சூலை 1986

**பழநியப்பன் பதிப்பகம்**
65 தியாகிகள் சாலை, தேவகோட்டை

முருகன் திருவடியை முன்வணங்கி அவனண்ணன்
பெருகு மதவேழப் பெரியமுகம் உடன்வணங்கி
உருகு தமிழாலே உறக்கம்வரும் வேளையிலே
மருதீசர் தாலாட்டாம் வணக்கமலர் தூவுகிறேன்
1

தூவுபவன் யாரென்று சொல்லுவதென் மரபாகும்
சேவுகனார் கல்லூரிச் சிங்கார வடிவேலன்
பூவனைய சோறாக்கிப் போடுகண்ட ஞானயான்
யாவருக்கும் தலைவணங்கி ஆராரோப் பாடுகிறேன்
2

வட்டகைகள் தோறும் வந்திருக்கும் நாமெல்லாம்
செட்டிக் குலத்தார்கள், திருப்பணிக்கே பிறந்தவர்கள்
பட்டினத்தார் நம்முடைய பாட்டையா; அவரிட்ட
தொட்டிலிலே துரைமகனைத் தொடர்ந்தாட்ட
வந்துள்ளேன்
3

கடலலையே தாலாட்டும்; காவிரியும் சீராட்டும்
உடனசையும் தென்னை மடல்விரிந்து சோறூட்டும்
இடையிலென் பாட்டெதற்கா? இடைமருதூர்ப்
பிள்ளையவன்
கடைவிழியாற் கேட்கின்றான் கண்வளரப்
பாடுகிறேன்
4

என்னூரார் முன்னோராம் இராமநாதப் பெரியாராம்
மின்வயிரப் பாட்டாம் மேலான தொட்டிலிட்டுக்
கண்மணியாம் மருதீசர் கண்வளரப் பார்த்திருந்தார்
அன்னாரின் அடிபற்றி அவரூரேன் பாடுகிறேன்.
5

ஆறு குழந்தைகளை அடுத்தடுத்துப் பெற்றதனால்
மாறாமல் தாலாட்டை மனையில் பழகியதால்
நூறுமைல் தாண்டிவந்து நோன்பிருந்து பெற்றவனை
ஆராரோப் பாடிவிழி அயர்விக்க வந்துள்ளேன்.
6

பேச்சும் கவியாகப் பேசுகிற நம்குலத்தின்
ஆச்சிகளின் தாலாட்டை அடுத்திருந்து
கேட்டதனால்
பூச்சூடி முடிக்காமல் புடவையிடை கட்டாமல்
பாச்சூடி மருதீசர் பரம்பரைநான் பாடுகிறேன் 7

ஆத்தா மீனாட்சி அடியேனைத் தொட்டிலிட்டுக்
கோத்தமலர்த் தாலாட்டின் குரலின்னும்
கேட்பதனால்
நாத்தடமாம் நரம்பாலே நல்லிதய வீணையிலே
பூத்த இசைமீட்டிப் பொன்மகனைப் பாடுகிறேன் 8

சீரங்கம் ஆடித் திருப்பாற் கடலாடி
வாரங்கா எனவேண்ட வந்துதித்த அப்பச்சி
ஈரங் காணாமல் என்விழியை வளர்த்ததனால்
ஓரம் ஒதுங்காமல் உள்வளவில் பாடுகிறேன். 9

பண்ணெடுத்து நானிங்கே பாட முயல்வேனேல்
கண்ணெடுத்து மருதீசர் காலெடுத்து நடந்திடுவார்
பொன்னெடுத்துத் தந்திடுவார் போதுமெனக் கெஞ்சிடுவார்
என்னடுத்து மகன்வருவான் இசையோடு பாடிடுவான் 10

என்மைந்தன் பாடுவதை எல்லாரும் உறங்காமல்
கண்விழித்துக் கேளுங்கள் கைதட்டிப் போற்றுங்கள்
பொன்னி நதிபோலப் பொங்கு கடல்போலப்
பொன் கொழித்தே எல்லோரும் புகழ்கொழித்து
வாழியரோ!
11

## தாலாட்டு



ஆராரோ ஆரிவரோ —என் கண்ணே
ஆராரோ ஆரிவரோ.

ஆராரோப் பாடுகிறேன்; ஆரிவரோ என்பாய்நீ
சீராரும் நகரத்தார் செல்வப் பெருங்குடியார்
ஊர்தோறும் வாழுகிறோம்; உனைக்காண
வந்துள்ளோம்
சீராரும் மருதீசா! திரவியமே! கண்வளராய்.
1

வேலுக்குப் பூசையிடும் வேள்வணிகர் வீடுவந்தும்
பாலுக் கழுவாயோ? பாலகனே! மருதீசா!
ஏழுகடல் சீமைதரும் ஏழுகப்பல் பசுப்பொழியும்
பாலுனக்குப் போதாதோ? பாலகனே! கண்வளராய்
2

ஆரடித்தார்? ஏனழுதாய்? அடித்தாரைச்
சொல்லியழு!
சேறடித்தால் கரையுமென்று சோறடித்தே
மடையடைக்கும்
நீரடிக்கும் வளநாடா! நீகிடந்த வில்வமர
வேரடித்தே அழுவாயோ? மேல்மகனே!
கண்வளராய்
3

வெயில் வருத்தாமல் விரிமரத்தின் நிழல்கிடந்தாய்!
கையில் சூடேறிக் கண்ணீர் வருகிறதோ?
பையில் பொன்வளரும் பட்டினத்தார் கண்மணியே!
நெய்யில் பணியாரம் நினக்களிப்போம் கண்வளராய் 4

தாயோ ஞானகலை தந்தையார் சிவநேசர்
சேயோ பட்டினத்தார் சிவகலையோ
அவர்மனைவி
நீயோ மருதீசன் நின்னூரோ இடைமருதூர்
வாயோ கதறுவதோ! மாதவமே! கண்வளராய் 5

கண்மூன் றுடையபிரான் கயிலைச் சிவபெருமான்
அன்பன் அவர்தோழன் அவன்குபேரப்
பதவியினான்
பெண்ணாள் உமையோடும் பெருந்தோழன்
அவனோடும்
கண்ணாரச் சிதம்பரத்தைக் காணவந்தான்
தாலேலோ
6

நடம்கொண்ட ஈசன் நயங்கண்ட குபேரனவன்
இடமெல்லாம் காண ஏக்கம் மிகக்கொண்டான்
திடமாக மூவருமே திருவெண் காடடைந்தார்
படம்போன்ற புகார்ப்பதியைப் பார்த்தாரும்
தாலேலோ
7

''பொன்னி வளநாட்டுப் புகாரின் வளங்களினை
எண்ணி முடியாதே! ஈசா அங்குதிக்க
என்னிதயம் துடிக்கிறதே'' என்றான் அதற்கீசன்
மன்னிடவே வரம்தந்தான் மானிடனாய்; தாலேலோ
8

கொட்டி நவமணிகள் குலுக்கி அளக்கின்ற
செட்டித் திருக்குலத்தில் சிவநேசச் செட்டிக்கும்
மட்டில்லா ஞானகலை மங்கைக்கும் குபேரனவன்
பட்டினத் தாராக வந்தானும் தாலேலோ
9

திருவெண் காடரெனும் திருக்குலத்துத் தெய்வத்தின்
அருளாலே வந்ததனால் அவர்பெயரே வைத்தார்கள்
பெருமான் வளர்ந்தார் பிள்ளையவர் ஐந்தாண்டில்
பெருமானின் தந்தையவர் பிரிந்தாராம் தாலேலோ
10

சிவக்காதல் அவருக்குச் சிறுவயதே தோன்றியது
தவத்தின் முரண்டாலே தனிப்பூசை வெறியுற்றார்
சிவனருளால் வெண்காட்டில் சிவபூசைப்
பேறுபெற்றார்
அவனருளின் திறமனைத்தும் அறிவித்தார் தாலேலோ
11

சிதம்பரமாம் செட்டியார் சிறப்புடையார் உள்ளூரார்
பதமான சிவகாமி பத்தினியாள் அவர்மனைவி
உதய நிலவாக உதித்தமகள் சிவகலைதான்
மதயானை பட்டினத்தார் மனையானாள் தாலேலோ
12

ஆண்டு முப்பதுடன் ஐந்தாகி வளர்ந்தாலும்
வாண்டு பிறக்கவில்லை வாழ்க்கை சிறக்கவில்லை
வேண்டி இடைமருதூர்ப் பெம்மான்பால் தவம்
கிடந்தார்
ஆண்டவனார் கனவதனில் அருளினார் தாலேலோ
13

அந்த மருதூரில் அந்தணராம் சிவசருமர்
சுந்தரியாம் அவர்மனைவி சுசீலை அவள்பெயராம்
வந்த வினைதீரப் பலதருமம் செய்பவர்கள்
நொந்தமிடி தீர நோக்கினார் தாலேலோ
14

இடைமருதூர் ஆலயத்தில் இருக்குமொரு வில்வமரம்
நடைபாதை ஓரத்தில் நான்கிடப்பேன் மகவாக
தடையின்றித் தூக்கிடுக தந்திடுக; பட்டினத்தார்
எடை தூக்கிப் பொன்தருவார் என்றாரே தாலேலோ
15

பட்டினத்தார் எடைதூக்கப் பாலகனாய் வந்தவனே!
செட்டிக் குலத்தாரின் சீர்தூக்கப் பிறந்தவனே!
எட்டிரண் டாண்டுகளே இங்கிருக்க வந்தவனே!
மட்டில்லாப் பேருளே! மருதீசா! கண்வளராய்
16

பிள்ளைக் கலிதீர்க்கப் பிறந்தருளும் பெருமானே!
வள்ளலென அந்தணர்க்கு வழங்கும்
கொடையரசே!
பிள்ளை விளையாட்டைப் பெருங்கடலில்
செய்தவனே!
எல்லையில்லாப் பேருளே! இன்னமுதே!
தாலேலோ
17

கப்பல் யாத்திரையால் கடல்கடந்த வாணிபத்தால்
குப்பையெரு விராட்டியினைக் கொண்டுவந்து
காட்டியதால்
ஒப்பில்லாப் பெருந்துறவின் உயர்வான
மகத்துவத்தை
இப்புவியோர் காண இயம்பியவா! தாலேலோ
18

ஏகம்ப வாணனையும் இடைமருதூர் ஈசனையும்
பாகம் பிரியாத பட்டினத்தார் பக்தியெனும்
தாகமது தீரத் தன்னைத்தான் துறந்துயரத்
தேகம் எடுத்துவந்த தெய்வமே! தாலேலோ
19

பிறவா திருக்கும் பெருவரத்தைக் கேட்டவரை
மறவாமல் எந்நாளும் மணிக்குலத்தார் கொண்டாட
உறவாகி வந்தவனே! உயிரின் பரிசான
துறவுக்கு வாய்த்த தூதுவனே தாலேலோ
20

காதற்ற ஊசியும் கடைவழிக்கு வாராத
மேதக்க செய்தியை மேதினியார் கண்டுணர
மாதிடையில் பிறக்காமல் மரத்திடையே பிறந்தருளி
ஓதாமல் மெய்ஞ்ஞானம் உணர்த்தியவா! தாலேலோ
21

கல்லாப் பிழையினையும் கற்றவர்கள் கற்றபடி
நில்லாப் பிழையினையும் நெஞ்சுருகி உன்பெயரைச்
சொல்லாப் பிழையினையும் சொல்லியே
செய்துவரும்
எல்லாப் பிழைகளையும் எங்குரைப்பேன்?
- தாலேலோ
22

மானிடத்தின் பெருமையினை மண்ணகத்தார்
கண்டுணர
ஊனிடத்தில் உயிர்வாங்கி ஓரிடத்தில் வந்தவனே!
தேனிடத்தில் கசப்பினையும் தெங்கிடத்தில்
எட்டியையும்
வானிடத்தில் இருளினையும் வைப்பதுவோ
தாலேலோ
23

பகுத்துணரும் அறிவெல்லாம் பணத்தடிமை
ஆகிறதே!
தொகுத்துவரும் பொருளெல்லாம் தொண்டையுடன்
முடிகிறதே
வகுத்தவழி புரள்கிறதே! வாழ்க்கைவழி
மறைகிறதே!
நிறுத்தவழி கூறாயா? நிர்மலமே கண்வளராய்
24

பண்வளரும் பாட்டானாய்! பாவளரும்
பொருளானாய்!
விண்வளரும் மழையானாய்! விதிவளரும் நெறியானாய்!
கண்வளர்வாய் என்றதனால் கடுந்தூக்கம்
கொள்ளாமல்
மண்வளரும் நிலையுரைப்பாய் மருதீசா! தாலேலோ
25

நாட்டில் அறம்வளர நல்லவரின் உரம்வளர
ஏட்டில் தமிழ்வளர இதயத்தில் ஒளிவளர
வீட்டில் நலம்வளர வில்வ மரநிழலாம்
கூட்டில் பிறந்த கோமளமே! கண்வளராய்

அச்சும் அமைப்பும் :

# தெய்வம்

அச்சு அரண்மனை

செ. வெ. ஊருணி வடக்கு

தேவகோட்டை



